கொடிக் குழீஇயின கொழுந்து எடுத்து எழுந்து மேற்கொள்ள,
இடிக் குழீஇ எழு மழைப் பெருங் குலங்களை இரித்த;
அடிக் குழீஇயிடும் இடம்தொறும் அதிர்ந்து எழுந்து ஆர்த்த
பொடிக் குழீஇ, அண்டம் படைத்தவன் கண்ணையும் புதைத்த. 98

ஆனை என்னும் மா மலைகளின் இழி மத அருவி
வான யாறுகள், வாசி வாய் நுரையொடு மயங்கி,
கான மா மரம் கல்லொடும் ஈர்த்தன, கடுகிப்
போன, போக்க அரும் பெருமைய, புணரியுள் புக்க. 99

தடித்து மீன்குலம் விசும்பிடைத் தயங்குவ—சலத்தின்
மடித்த வாயினர், வாள் எயிற்று அரக்கர், தம் வலத்தின்
பிடித்த திண் படை விதிர்த்திட விதிர்த்திடப் பிறழ்ந்து,
பொடித்த வெம் பொறி புகையொடும் போவன போல்வ. 100

சொன்ன நூறுடை வெள்ளம், அன்று இராவணன் துரந்த
அன்ன சேனையை வாயிலூடு உமிழ்கின்ற அமைதி,
முன்னம் வேலையை முழுவதும் குடித்தது, 'முறை ஈது'
என்ன, மீட்டு உமிழ் தமிழ்முனி ஒத்தது, அவ் இலங்கை. 101

சங்கு பேரியும், காளமும் தாளமும், தலைவர்
சிங்க நாதமும், சிலையின் நாண் ஒலிகளும், சின மாப்
பொங்கும் ஓதையும், புரவியின் அமலையும், பொலந் தேர்
வெங் கண் ஓலமும், மால் என, விழுங்கிய உலகை. 102

அரக்கர்க்கும் வானரர்க்கும் நிகழ்ந்த பெரும் போர்

புக்கதால் பெரும் போர்ப் படை, பறந்தலைப் புறத்தில்;
தொக்கதால், நெடு வானரத் தானையும் துவன்றி,
ஒக்க ஆர்த்தன, உறுக்கின, தெழித்தன, உருமின்
மிக்க வான் படை விடு கணை மா மழை விலக்கி. 103

குன்று கோடியும் கோடிமேல் கோடியும் குறித்த
வென்றி வானர வீரர்கள், முகம்தொறும் வீச,
ஒன்றின், நால்வரும் ஐவரும் இராக்கதர் உலந்தார்;
பொன்றி வீழ்ந்தன, பொரு கரி, பாய் பரி, பொலந் தேர். 104

மழுவும், சூலமும், வலயமும், நாஞ்சிலும், வாளும்,
எழுவும், ஈட்டியும், தோட்டியும், எழு முனைத் தண்டும்,
தழுவும் வேலொடு கணையமும், பகழியும், தாக்க,
குழுவினோடு பட்டு உருண்டன, வானரக் குலங்கள். 105

முற்கரங்களும், முசலமும், முசுண்டியும், முளையும்,
சக்கரங்களும், பிண்டிபாலத்தொடு தண்டும்,
கப்பணங்களும், வளையமும், கவண் உமிழ் கல்லும்,
வெற்புஇனங்களை நுறுக்கின; கவிகளை வீழ்த்த. 106

கதிர் அயில் படைக் குலம் வரன்முறை முறை கடாவ,
அதிர் பிணப் பெருங் குன்றுகள் படப் பட, அழிந்த
உதிரம் உற்ற பேர் ஆறுகள் திசை திசை ஓட,
எதிர் நடக்கில, குரக்குஇனம்; அரக்கரும் இயங்கார். 107

மடிந்த வானரரும் அரக்கரும் தேவர்கள் ஆதல்

யாவர் ஈங்கு இகல் வானரம் ஆயினர், எவரும்
தேவர் ஆதலின், அவரொடும் விசும்பிடைத் திரிந்தார்;
மேவு காதலின் மெலிவுறும் அரம்பையர் விரும்பி,
ஆவி ஒன்றிடத் தழுவினர், பிரிவு நோய் அகன்றார். 108

கரக்கும் மாயமும், வஞ்சமும், களவுமே, கடனா,
இரக்கமே முதல் தருமத்தின் நெறி ஒன்றும் இல்லா,
அரக்கரைப் பெருந் தேவர்கள் ஆக்கின அமலன்
சரத்தின், வேறு இனிப் பவித்திரம் உளது எனத் தகுமோ? 109

இலக்குவன் பெரும் போர் விளைவித்தல்

அந்தகன் பெரும் படைக்கலம் மந்திரத்து அமைந்தான்,
இந்து வெள் எயிற்று அரக்கரும், யானையும், தேரும்,
வந்த வந்தன, வானகம் இடம் பெறுவண்ணம்
சிந்தினான் சரம், இலக்குவன், முகம்தொறும் திரிந்தான். 110

கும்பகருணன் களத்தில் இட்ட தண்டைக் கொண்டு அனுமன் பொருதல்

கும்பகன்னன் ஆண்டு இட்டது, வயிர வான் குன்றின்
வெம்பு வெஞ் சுடர் விரிப்பது, தேவரை மேல்நாள்
தும்பையின் தலைத் துரந்தது, சுடர் மணித் தண்டு ஒன்று,
இம்பர் ஞாலத்தை நெளிப்பது, மாருதி எடுத்தான். 111

'காற்று அன்று, இது கனல் அன்று' என இமையோரிடை காணா
ஏற்றம்கொடு, விசையோடு உயர் கொலை நீடிய இயல்பால்,
சீற்றம் தனி உருவாய், இடை தேறாதது ஓர் மாறு ஆம்
கூற்றம் கொடு முனை வந்தெனக் கொன்றான், இகல் வென்றான். 112

வெங் கண் மதமலைமேல், விரை பரிமேல், விடு தேர்மேல்,
சங்கம் தரு படை வீரர்கள் உடல்மேல், அவர் தலைமேல்,
''எங்கும் உளன் ஒருவன்'' என இரு நான் மறை தெரிக்கும்
செங் கண்ணவன் இவனே' எனத் திரிந்தான்—கலை தெரிந்தான்.

கிளர்ந்தாரையும் கிடைத்தாரையும் கிழித்தான், கனல் விழித்தான்;
களம்தான் ஒரு குழம்பு ஆம் வகை அரைத்தான், இரு கரத்தால்;
வளர்ந்தான் நிலை உணர்ந்தார், 'உலகு ஒரு மூன்றையும் வலத்தால்
அளந்தான் முனம் இவனே?' என இமையோர்களும் அயிர்த்தார்.

மத்தக் கரி நெடு மத்தகம் வகிர்பட்டு உகு மணி மேல்
முத்தின் பொலி முழு மேனியன், முகில் விண் தொடு மெய்யான்,
ஒத்தக் கடையுகம் உற்றுழி, உறு கால் பொர, உடு மீன்
தொத்தப் பொலி கனகக் கிரி வெயில் சுற்றியது ஒத்தான். 115

இடித்தான் நிலம் விசும்போடு என, இட்டான் அடி, எழுந்தான்;
பொடித்தான், கடற் பெருஞ் சேனையை; பொலந் தண்டு தன் வலத்தால்
பிடித்தான்; மத கரி, தேர், பரி, பிழம்பு ஆனவை குழம்பா
அடித்தான்; உயிர் குடித்தான்; எடுத்து ஆர்த்தான்; பகை தீர்த்தான்.

நூறாயிரம் மத மால் கரி, ஒரு நாழிகை நுவல்போது,
ஆறாய், நெடுங் கடுஞ் சோரியின் அளறு ஆம் வகை அரைப்பான்,
ஏறு ஆயிரம் எனலாய் வரும் வய வீரரை இடறி,
தேறாது உறு கொலை மேவிய திசை யானையின் திரிந்தான். 117

தேர் ஏறினர், பரி ஏறினர், விடை ஏறினர், சின வெங்
கார் ஏறினர், மழை ஏறினர், கலை ஏறினர், பல வெம்
போர் ஏறினர், புகழ் ஏறினர், புகுந்தார் புடை வளைந்தார்;
நேர் ஏறினர் விசும்பு ஏறிட, நெரித்தான், கதை திரித்தான். 118

சுக்கிரீவன் முதலிய வானரத்தலைவர், ஒருவரை ஒருவர் காணாராய்,
அரக்கரின் படைக் கடலில் அமைதல்

அரி குல மன்னன், நீலன், அங்கதன், குமுதன், சாம்பன்,
பரு வலிப் பனசன், என்று இப் படைத் தலை வீரர் யாரும்,
பொரு சினம் திருகி, வென்றிப் போர்க் கள மருங்கில் புக்கார்;
ஒருவரை ஒருவர் காணார்; உயர் படைக் கடலின் உள்ளார். 119

அனுமனுக்கும் அகம்பனுக்கும் நிகழ்ந்த போர்

தொகும் படை அரக்கர் வெள்ளம் துறைதொறும் அள்ளித் தூவி,
நகம் படை ஆகக் கொல்லும் நரசிங்கம் நடந்தது என்ன,
மிகும் படைக் கட்டுள் செல்லும் மாருதி, வீர வாழ்க்கை
அகம்பனைக் கண்டான், தண்டால் அரக்கரை அரைக்கும் கையான்.

மலைப் பெருங் கழுதை ஐஞ்ஞூற்று இரட்டியன், மனத்தின் செல்லும்
தலைத் தடந் தேரன், வில்லன், தாருகன் என்னும் தன்மைக்
கொலைத் தொழில் அவுணன்; பின்னை, இராக்கத வேடம் கொண்டான்.
சிலைத் தொழில் குமரன் கொல்ல, தொல்லை நாள் செருவில் தீர்ந்தான்.

'பாகசாதனனும், மற்றைப் பகை அடும் திகிரி பற்றும்
ஏக சாதனனும், மூன்று புரங்கள் பண்டு எரித்துளோனும்
போக; தாம் ஒருவர் மற்று இக் குரங்கொடு பொரக் கற்றூரே,
ஆக; கூற்று ஆவி உண்பது இதனின் மேற்று ஆகும்' என்றான். 122

'யான் தடேன்என்னின், மற்று இவ் எழு திரை வளாகம் என் ஆம்?
வான் தடாது; அரக்கர் என்னும் பெயரையும் மாய்க்கும்' என்னு,
ஊன் தடாநின்ற வாளி மழை துரந்து, உருத்துச் சென்றான்;
மீன் தொடாநின்ற திண் தோள் அனுமனும், விரைவின் வந்தான்.

தேரொடு களிறும் மாவும் அரக்கரும் நெருங்கித் தெற்ற,
காரொடு கன்லும் காலும் கிளர்ந்தது ஓர் காலம் என்ன,
வாரொடு தொடர்ந்த பைம் பொற் கழலினன் வருதலோடும்,
சூரொடும் தொடர்ந்த தண்டைச் சுழற்றினன், வயிரத் தோளான்.

எற்றின, எறிந்த, வல்லே ஏயின, எய்த, பெய்த,
முற்றின படைகள் யாவும், முறை முறை முறிந்து சிந்த,
சுற்றின வயிரத் தண்டால் துகைத்தனன், அமரர் துள்ள;
கற்றிலன் இன்று கற்றான், கதையினல் வதையின் கல்வி. 125

அகம்பனும் காணக் காண, ஐ-இரு கோடிக் கைம்மா,
முகம் பயில் கலினப் பாய்மா, முனை எயிற்று அரக்கர், மூரி
நுகம் பயில் தேரினேடும் நுறுக்கினன்; நூழில் தீர்த்தான்;—
உகம் பெயர் ஊழிக் காற்றின் உலைவு இலா மேரு ஒப்பான். 126

'இன்று இவன்தன்னை விண்ணுடு ஏற்றி, வாள் இலங்கை வேந்தை
வென்றியன் ஆக்கி, மற்றை மனிதரை வெறியர் ஆக்கி,
நின்று உயர் நெடிய துன்பம் அமரர்பால் நிறுப்பென்' என்னுச்
சென்றனன் அகம்பன்; 'நன்று, வருக!' என அனுமன் சேர்ந்தான்.

படுகளப் பரப்பை நோக்கி, பாழி வாய் மடித்து, நூழில்
சுடு கனற் பொறிகள் வெங் கண் தோன்றிட, கொடித் தேர் தூண்டி,
விடு கனல் பகழி மாரி மழையினும் மும்மை வீசி,
முடுகுறச் சென்று, குன்றின் முட்டினன், முகிலின் ஆர்ப்பான். 128

சொரிந்தன பகழி மாரி தோளினும் மார்பின்மேலும்
தெரிந்தன—அசனி போலத் தெறு பொறி பிதிர்வ திக்கின்,
வரிந்தன எருவை மானச் சிறைகளால், அமரர் மார்பை
அரிந்தன, வடிம்பு பொன் கொண்டு அணிந்தன, வாங்கு கண்ண.

மார்பினும் தோளின்மேலும், வாளி வாய் மடுத்த வாயில்,
சோர் பெருங் குருதி சோரத் துளங்குவான், தேருமுன்னம்,
தேர் இரண்டு அருகு பூண்ட கழுதையும் அச்சும் சிந்த,
சாரதி, புரள, வீரத் தண்டிஞல் கண்டம் செய்தான். 130

'வில்லிஞல் அனுமனை வெல்ல இயலாது' என்று எண்ணிய அகம்பன்
தண்டு கொண்டு அனுமனுடன் பொருதல்

'வில்லிஞல் இவனை வெல்லல் அரிது' எனு, நிருதன்—வெய்ய
மல்லிஞல் இயன்ற தோளான், வலியிஞல், வானத் தச்சன்
கொல்லிஞல் இயன்றது, ஆங்கு, ஓர் கொடு முனைத் தண்டு கொண்டான்,—
அல்லிஞல் வகுத்தது அன்ன மேனியான், முகிலின் ஆர்ப்பான். 131

தாக்கிஞர்; இடத்தும் மற்றும் வலத்திஞம் திரிந்தார் சாரி;
ஒக்கிஞர்; ஊழின் ஆர்ப்புக் கொட்டிஞர்; கிட்டிஞர்; கீழ்த்
தூக்கிஞர்; சுழற்றிஞர், மேல்; சுற்றிஞர், எற்ற எற்ற;
நீக்கிஞர்; நெருக்கிஞர்; மேல் நெருங்கிஞர்; நீங்கிஞர், மேல். 132

தட்டிஞர்; தழுவிஞர்; மேல் தாவிஞர்; தரையிஞேடும்
கிட்டிஞர்; கிடைத்தார்; வீசிப் புடைத்தனர் கீழும் மேலும்
கட்டிஞர்; காத்தார்; ஒன்றும் காண்கிலார், இறவு; கண்ணுற்று,
ஒட்டிஞர்; மாறி வட்டம் ஓடிஞர்; சாரி போஞர். 133

மையொடும் பகைத்து நின்ற நிறத்திஞன் வயிர மார்பில்,
பொய்யொடும் பகைத்து நின்ற குணத்திஞன் புகுந்து மோத,
வெய்யவன், தன் கைத் தண்டால் விலக்கிஞன்; விலக்கலோடும்,
கையொடும் இற்று, மற்று அக் கதை களம் கண்டது அன்றே. 134

கையொடு தண்டு நீங்க, கடல் எனக் கலக்கம் உற்ற
மெய்யொடு நின்ற வெய்யோன், மிடலுடை இடக் கை ஓச்சி,
ஐயனை அலங்கல் ஆகத்து அடித்தனன்; அடித்த ஓசை,
ஒய்யென வயிரக் குன்றத்து உருமின்ஏறு இடித்தது ஒத்த. 135

அடித்தவன்தன்னை நோக்கி, அசனிஏறு அனைய தண்டு
பிடித்து நின்றேயும் எற்றுன், 'வெறுங் கையான்; பிழையிற்று' என்னு,
மடித்து வாய், இடத்துக் கையால் மார்பிடைக் குத்த, வாயால்
குடித்து நின்று உமிழ்வான் என்னக் கக்கினன், குருதி வெள்ளம்.

அகம்பனை அனுமன் வீழ்த்துதல்

மீட்டும் அக் கையால் வீசி, செவித்தலத்து எற்ற, வீழ்ந்தான்;
கூட்டிஞன் உயிரை, விண்ணேர் குழாத்திடை; அரக்கர் கூட்டம்
காட்டில் வாழ் விலங்கு மாக்கள் கோள் அரி கண்ட என்ன,
ஈட்டம் உற்று எதிர்ந்த எல்லாம் இரிந்தன, திசைகள் எங்கும். 137

இலக்குவன் முதலியோரைப் பற்றிய செய்தி தெரியாமையால், அனுமன் துயருடன் தேடிச் செல்லுதல்

ஆர்க்கின்ற குரலும் கேளான்; இலக்குவன் அசனி ஏற்றைப்
பேர்க்கின்ற சிலையின் நாணின் பேர் ஒலி கேளான்; வீரன்
யார்க்கு இன்னல் உற்றது என்பது உணர்ந்திலன்; இசைப்பார் இல்லை;
போர்க் குன்றம் அனைய தோளான் வெய்யது ஓர் பொருமல் உற்றான்.

அரக்கர் பெருஞ் சேனையில் அங்கதன் முதலியோர் நீண்ட தூரம் இடையிட்டு நின்று பொருதல்

வீசின நிருதர் சேனை வேலையில் தென்மேல் திக்கின்
யோசனை ஏழு சென்றான் அங்கதன்; அதனுக்கு அப்பால்,
ஆசையின் இரட்டி சென்றான் அரி குல மன்னன்; அப்பால்,
ஈசனுக்கு இளைய வீரன் இரட்டிக்கும் இரட்டி சென்றான். 139

மற்றையோர் நாலும் ஐந்தும் யோசனை மலைந்து புக்கார்;
கொற்ற மாருதியும் வள்ளல் இலக்குவன் நின்ற சூழல்
முற்றினன்—இரண்டு மூன்று காவதம் ஒழிய, பின்னும்
சுற்றிய சேனை நீர்மேல் பாசிபோல் மிடைந்து சுற்ற. 140

'இளையவன் நின்ற சூழல் எய்துவென், விரைவின்' என்னா,
உளைவு வந்து உள்ளம் தூண்ட, ஊழி வெங் காலின் செல்வான்,
களைவு அருந் துன்பம் நீங்கக் கண்டனன் என்ப மன்னோ—
விளைவன செருவில் பல் வேறு ஆயின குறிகள் மேய. 141

சென்ற அனுமன் தூரத்தே இலக்குவன் போர் செய்யும் குறிகளைக் காணுதல்

ஆனையின் கோடும், பீலித் தழைகளும், ஆரத்தோடு
மான மா மணியும், பொன்னும், முத்தமும், கொழித்து வாரி,
மீன் என அங்கும் இங்கும் படைக்கலம் மிளிர, வீசும்
பேன வெண் குடைய ஆய, குருதிப் பேர் ஆறு கண்டான். 142

ஆசைகள்தோறும் சுற்றி அலைக்கின்ற அரக்கர்தம்மேல்
வீசின பகழி, அற்ற தலையொடும் விசும்பை முட்டி,
ஓசையின் உலகம் எங்கும் உதிர்வுற, ஊழி நாளில்
காசு அறு கல்லின் மாரி பொழிவபோல், விழுவ கண்டான். 143

அருளுடைக் குரிசில் வாளி, அந்தரம் எங்கும் தாம் ஆய்,
தெருள் உறத் தொடர்ந்து வீசிச் செல்வன, தேவர் காண
இருளிடைச் சுடலை ஆடும் எண் புயத்து அண்ணல் வண்ணச்
சுருளுடைச் சடையின் கற்றைச் சுற்று எனச் சுடர்வ, கண்டான்.

நெய் உறக் கொளுத்தப்பட்ட நெருப்பு என, பொருப்பின் ஓங்கும்
மெய் உறக் குருதித் தாரை விசும்பு உற, விளங்கி நின்றது—
ஐயனை, கங்குல் மாலை, அரசு என அறிந்து, காலம்,
கை விளக்கு எடுத்தது என்ன—கவந்தத்தின் காடு கண்டான். 145

ஆள் எலாம் இழந்த தேரும் ஆனையும் ஆடல் மாவும்,
நாள் எலாம் எண்ணினாலும் தொலைவு இலா நாதர் இன்றி,
தாள் எலாம் குலைய ஓடித் திரிவன, தாங்கல் ஆற்றும்
கோள் இலா மன்னன் நாட்டுக் குடி எனக் குலைவ கண்டான். 146

மிடல் கொளும் பகழி, வானின் மாரியின் மும்மை வீசி,
மடல் கொளும் அலங்கல் மார்பன் மலைந்திட, உலைந்து மாண்டார்
உடல்களும், உதிர நீரும், ஒளிர் படைக்கலமும், உற்ற
கடல்களும், நெடிய கானும், கார் தவழ் மலையும், கண்டான். 147

சுழித்து எறி ஊழிக் காலத்து உரும் எனத் தொடர்ந்து தோன்ற,
தழிக் கொண்ட குருதி வேலை தாவுவான், 'தனிப் பேர் அண்டம்
கிழித்தது, கிழித்தது' என்னும் நாண் உரும்ஏறு கேட்டான்;
அழித்து ஒழி காலத்து ஆர்க்கும் ஆர்கலிக்கு இரட்டி ஆர்த்தான்.

தன்னை வந்து வணங்கிய அனுமனைத் தழுவி, இலக்குவன் சேனையின்
நிலைமையை உசாவுதல்

ஆர்த்த பேர் அமலை கேளா, அணுகினன் அனுமன்; 'எல்லா
வார்த்தையும் கேட்கல் ஆகும்' என்று, அகம் மகிழ்ந்து, வள்ளல்
பார்த்தனன்; பாராமுன்னம் பணிந்தனன், விசயப் பாவை
தூர்த்தனை; இளைய வீரன் தழுவினன், இனைய சொன்னான்: 149

'அரி குல வீரர், ஐய! யாண்டையர்? அருக்கன் மைந்தன்
பிரிவு உனைச் செய்தது எவ்வாறு? அங்கதன் பெயர்ந்தது எங்கே?
விரி இருள் பரவைச் சேனை வெள்ளத்து விளைந்த ஒன்றும்
தெரிகிலென்; உரைத்தி' என்றான். சென்னிமேல் கையன் சொல்வான்.

அனுமனின் மறுமொழி

'போயினார் போயவாறும், போயினது அன்றிப் போரில்
ஆயினார் ஆயது ஒன்றும், அறிந்திலென், ஐய! யாரும்
மேயினார் மேய போதே தெரியுறும், விளைந்தது' என்றான்—
தாயினான் வேலையோடும் அயிந்திரப் பரவைதன்னை. 151

'மந்திரம் உளதால், ஐய! உணர்த்துவென்; மறைநூல் ஆய்ந்த
சிந்தையின் உணர்ந்து, செய்யற்பாற்று எனின், செய்தி; தெவ்வர்
தந்திரம்அதனைத் தெய்வப் படையினால் சமைப்பின்அல்லால்,
எந்தை! நின் அடியார் யாரும் எய்தலர், நின்னை' என்றான். 152

அனுமன் உரைத்தவண்ணம் இலக்குவன் சிவன் படையை வீசுதல்

'அன்னது புரிவென்' என்னா, ஆயிர நாமத்து அண்ணல்-
தன்னையே தொழுது வாழ்த்தி, சரங்களைத் தெரிந்து வாங்கி,
பொன் மலை வில்லினான்தன் படைக்கலம் பொருந்தப் பற்றி,
மின் எயிற்று அரக்கர்தம்மேல் ஏவினான்—வில்லின் செல்வன். 153




முக்கணன் படையை மூட்டி விடுதலும், மூங்கில் காட்டில்
புக்கது, ஓர் ஊழித் தீயின், புறத்து ஒன்றும் போகாவண்ணம்
அக் கணத்து எரித்து வீழ்த்தான், அரக்கர்தம் படையை; ஆழித்
திக்கு எலாம் இருளும் தீர்ந்த; தேவரும் இடுக்கண் தீர்ந்தார். 154

முக்கணன் படையால் அரக்கர் சேனை இரிய, வானரர் மகிழ்ந்து,
இலக்குவனை வந்து கூடுதல்

தேவர்தம் படையை விட்டான் என்பது சிந்தை செய்யா,
மா பெருந் தேரில் நின்ற மகோதரன் மறையப் போனான்;
ஏவரும் இரிந்தார் எல்லாம், இன மழை என்ன ஆர்த்து,
கோ இளங் களிற்றை வந்து கூடினார்; ஆடல் கொண்டார். 155

யாவர்க்கும் தீது இலாமை கண்டு கண்டு, உவகை ஏற,
தேவர்க்கும் தேவன் தம்பி திரு மனத்து ஐயம் தீர்ந்தான்;
காவல் போர்க் குரக்குச் சேனை கடல் எனக் கிளர்ந்து சுற்ற,
பூ வர்க்கம் இமையோர் தூவ, பொலிந்தனன்; தூதர் போனார்.

தூதர் சென்று, இராவணனுக்கும் இந்திரசித்திற்கும் செய்தி கூறுதல்

இலங்கையர் கோனை எய்தி, எய்தியது உரைத்தார். 'நீவிர்
விலங்கினிர் போலும்; வெள்ளம் நூற்றை ஓர் வில்லின், வேழக்
குலங்களினோடும் கொல்லக் கூடுமோ?' என்ன, 'கொன்றை
அலங்கலான் படையின்' என்றார். 'அன்னதேல், ஆகும்' என்றான்.

'வந்திலன் இராமன்; வேறு ஓர் மலை உளான்; உந்தை மாயத்
தந்திரம் தெரிவான் போனான், உண்பன தாழ்க்க; தாழா
எந்தை! ஈது இயன்றது' என்றார். 'மகோதரன் யாண்டை?' என்ன;
'அந்தரத்திடையன்' என்றார். இராவணி, 'அழகிற்று!' என்றான். 158

'இதுவே ஏற்ற காலம்' என எண்ணிய இந்திரசித்து பிரமாத்திரம் விடும்
பொருட்டு வேள்வி செய்தல்

'காலம் ஈது' எனக் கருதிய இராவணன் காதல்,
ஆல மா மரம் ஒன்றினை விரைவினில் அடைந்தான்;
மூல வேள்விக்கு வேண்டுவ கலப்பைகள் முறையால்
கூலம் நீங்கிய இராக்கதப் பூசுரர் கொணர்ந்தார். 159

அம்பினால் பெருஞ் சமிதைகள் அமைத்தனன்; அனலில்
தும்பை மா மலர் தூவினன்; காரி எள் சொரிந்தான்;
கொம்பு பல்லொடு, கரிய வெள்ளாட்டு இருங் குருதி,
வெம்பு வெந் தசை, முறையின் இட்டு, எண்ணெயால் வேட்டான்;

பிரம்மாத்திரத்துடன் வானில் சென்று, இந்திரசித்து மாயையினால் மறைந்திருத்தல்

வலம் சுழித்து வந்து எழுந்து எரி, நறு வெறி வயங்கி,
நலம் சுரந்தன பெருங் குறி முறைமையின் நல்க,
குலம் சுரந்து எழு கொடுமையன், வரன்முறை கொண்டே,
'நிலம் சுரந்து எழும் வென்றி' என்று உம்பரில் நிமிர்ந்தான். 161

விசும்பு போயினன், மாயையின் பெருமையான்; மேலைப்
பசும் பொன் நாட்டவர் நாட்டமும் உள்ளமும் படரா,
அசும்பு விண்ணிடை அடங்கினன், முனிவரும் அறியாத்
தசும்பு நுண் நெடுங் கோளொடு காலமும் சார. 162

மாயையினால் மகோதரன் இந்திர வடிவுடன் வந்து பொருதலும், வானரர் திகைத்தலும்

அனையன் நின்றனன்; அவ் வழி, மகோதரன் அறிந்து, ஓர்
வினையம் எண்ணினன், இந்திர வேடத்தை மேவி,
துனை வலத்து அயிராபதக் களிற்றின்மேல் தோன்றி,
முனைவர் வானவர் எவரொடும் போர் செய மூண்டான். 163

'அரக்கர், மானிடர், குரங்கு, எனும் இவை எலாம் அல்ல
உருக்களாய் உள, யாவையும், உலகத்தின் உலவாத்
தருக்கு போர்க்கு உடன் வந்துளவாம்' எனச் சமைத்தான்;
வெருக்கொளப் பெருங் கவிப் படை குலைந்தது, விலங்கி. 164

'கோடு நான்குடைப் பால் நிறக் களிற்றின்மேல் கொண்டான்
ஆடல் இந்திரன்; அல்லவர் யாவரும் அமரர்,
சேடர், சிந்தனை முனிவர்கள்; அமர் பொரச் சீறி,
ஊடு வந்து உற்றது என்கொலோ, நிபம்?' என உலைந்தார். 165

'முனிவரும் வானவரும் முனிந்து வந்து பொரக் காரணம் என்ன?' என்று அனுமனை நோக்கி இலக்குவன் வினவுதல்

அனுமன் வாள் முகம் நோக்கினன், ஆழியை அகற்றித்
தனு வலம் கொண்ட தாமரைக்கண்ணவன் தம்பி,
'முனிவர் வானவர் முனிந்து வந்து எய்த, யாம் முயன்ற
துனி இது என்கொலோ? சொல்லுதி, விரைந்து' எனச் சொன்னான்.

அப்பொழுது, இந்திரசித்து பிரமாத்திரத்தை இலக்குவன்மேல் விடுதலும் அதனால் நேர்ந்த விளைவுகளும்

இன்ன காலையின் இலக்குவன் மேனிமேல் எய்தான்,
முன்னை நான்முகன் படைக்கலம்; இமைப்பதன்முன்னம்,
பொன்னின் மால் வரைக் குரீஇஇனம் மொய்ப்பது போல,
பன்னல் ஆம் தரம் அல்லன சுடர்க் கணை பாய்ந்த. 167

இலக்குவன், அனுமன், முதலியோர் அயர்ந்து, பலபடியாக விழுதல்

கோடி கோடி நூறுயிரம் கொடுங் கணைக் குழாங்கள்
மூடி மேனியை முற்றுறச் சுற்றின மூழ்க,
ஊடு செய்வது ஒன்று உணர்ந்திலன், உணர்வு புக்கு ஒடுங்க,
ஆடல் மாக் கரி சேவகம் அமைந்தென, அயர்ந்தான். 168

அனுமன், 'இந்திரன் வந்தவன் என்கொல், ஈது அமைந்தான்?
இனி என்? எற்றுவென் களிற்றிேனோடு எடுத்து' என எழுந்தான்;
தனுவின் ஆயிரம் கோடி வெங் கடுங் கணை தைக்க,
நினைவும் செய்கையும் மறந்துபோய், நெடு நிலம் சேர்ந்தான். 169

அருக்கன் மா மகன், ஆடகக் குன்றின்மேல் அலர்ந்த
முருக்கின் கானகம் ஆம் என, குருதி நீர் மூட,
தருக்கி, வெஞ் சரம் தலைத்தலை மயங்கின தைக்க,
உருக்கு செம்பு அன கண்ணினன், நெடு நிலம் உற்றான். 170

அங்கதன், பதினுயிரம் அயில் கணை அழுந்த,
சிங்க ஏறு இடியுண்டென நெடு நிலம் சேர்ந்தான்;
சங்கம் ஏறிய பெரும் புகழ்ச் சாம்பனும் சாய்ந்தான்,
துங்க மார்பையும் தோளையும் வடிக் கணை துளைக்க. 171

நீலன், ஆயிரம் வடிக் கணை நிறம் புக்கு நெருங்க,
காலனார் முகம் கண்டனன்; இடபன் விண் கலந்தான்;
ஆலமே அன்ன பகழியால், பனசனும் அயர்ந்தான்;
கோலின் மேவிய கூற்றினால், குமுதனும் குறைந்தான். 172

வேலை கட்டவன், ஆயிரம் பகழியால், வீழ்ந்தான்;
வாலி நேர் வலி மயிந்தனும் துமிந்தனும் மாண்டார்;
கால வெந் தொழில் கவயனும் வானகம் கண்டான்;
மாலை வாளியின் கேசரி மண்ணிடை மடிந்தான். 173

[கனகன் ஆயிரம் கணை பட, விண்ணிடைக் கலந்தான்;
அனகன் ஆயின சங்கனும் அக் கணத்து அயர்ந்தான்;
முனையின் வாளியின் சதவலி என்பவன் முடிந்தான்;
புனையும் அம்பினில் தம்பனும் பொருப்பு எனப் புரண்டான்.] 174

[விந்தம் அன்ன தோள் சரபனின், சுசேடணன், வினதன்,
கெந்தமாதனன், இடும்பன், வன் ததிமுகன், கிளர,
உந்து வார் கணை கோடி தம் உடலம் உற்று ஒளிப்ப,
தம்தம் நல் உணர்வு ஒடுங்கினர், மண் உறச் சாய்ந்தார்.] 175

மற்றை வீரர்கள் யாவரும் வடிக் கணை மழையால்
முற்றும் வீந்தனர்; முழங்கு பேர் உதிரத்தின் முந்நீர்
எற்று வான் திரைக் கடலொடும் பொருது சென்று ஏற,
ஒற்றை வான் கணை ஆயிரம் குரங்கினை உருட்ட. 176

தனைத்து வைத்தது, சதுமுகன் பெரும் படை தள்ளி;
ஒளிக்க, மற்றொரு புகலிடம் உணர்கிலர்; உருமின்
வளைத்து வீக்கிய வாளியால், மண்ணொடும் திண்ணம்
முளைப் புடைத்தன ஒத்தன; வானரம் முடிந்த. 177

குவளைக் கண்ணினை வான் அர மடந்தையர் கோட்டித்
துவள, பாரிடைக் கிடந்தனர்; குருதி நீர் சுற்றித்
திவள, கீழொடு மேல் புடை பரந்து இடை செறிய,
பவளக் காடுடைப் பாற்கடல் ஒத்தது, அப் பரவை. 178

விண் சென்ற வானரர்க்குத் தேவர்கள் விருந்து செய்து பாராட்டுதல்

விண்ணில் சென்றது, கவிக் குலப் பெரும் படை வெள்ளம்;
கண்ணில் கண்டனர் வானவர், விருந்து எனக் கலந்தார்,
உள் நிற்கும் பெருங் களிப்பினர், அளவளாய் உவந்தார்;
'மண்ணில் செல்லுதிர், இக் கணத்தே' எனும் மனத்தார். 179

'பார் படைத்தவன் படைக்கு ஒரு பூசனை படைத்தீர்;
நீர் படக் கடவீர்அலீர்;—வரி சிலை நெடியோன்
பேர் படைத்தவற்கு அடியவருக்கு அடியரும் பெறுவார்,
வேர் படைத்த வெம் பிறவியில் துவக்குணா, வீடு. 180

'நங்கள் காரியம் இயற்றுவான் பாரிடை நடந்தீர்;
உங்கள் ஆர் உயிர் எம் உயிர்; உடல் பிறிது உற்றீர்;
செங் கண் நாயகற்காக வெங் களத்து உயிர் தீர்ந்தீர்;
எங்கள் நாயகர் நீங்கள்' என்று இமையவர் இசைத்தார். 181

இந்திரசித்து வெற்றிச் சங்கம் ஊதி, தந்தையின் இருப்பிடம் சென்று
சார்ந்து, செய்தி சொல்லுதல்

'வெங் கண் வானரக் குழுவொடும், இளையவன் விளிந்தான்;
இங்கு வந்திலன், இராமன் இப்போது' என இகழ்ந்தான்;
சங்கம் ஊதினன்; தாதையை வல்லையில் சார்ந்தான்;
பொங்கு போரிடைப் புகுந்துள பொருள் எலாம் புகன்றான். 182

'இராமன் இறந்திலனோ?' என்ற இராவணன் வினாவுக்கு இந்திரசித்து
கூறிய மறுமொழி

'இறந்திலன்கொலாம் இராமன்?' என்று இராவணன் இசைத்தான்;
'துறந்து நீங்கினன்; அல்லனேல், தம்பியைத் தொலைத்து,
சிறந்த நண்பரைக் கொன்று, தன் சேனையைச் சிதைக்க,
மறந்து நிற்குமோ, மற்று அவன் திறன்?' என்றான், மதலை. 183

இராவணன் அமைதி பெற, இந்திரசித்தும் மகோதரனும் தத்தம் இருப்பிடம் செல்லுதல்

'அன்னதே' என, அரக்கனும் ஆதரித்து அமைந்தான்;
சொன்ன மைந்தனும், தன் பெருங் கோயிலைத் தொடர்ந்தான்;
மன்னன் ஆணையின் போயினன், மகோதரன் வந்தான்;
என்னை ஆளுடை நாயகன் வேறு இடத்து இருந்தான். 184

வேறு இடத்து இருந்த இராமன் தெய்வப் படைகளுக்குப் பூசனை இயற்றி, போர்க்களம் நோக்கிப் புறப்படுதல்

செய்ய தாமரை நாள்மலர்க் கைத் தலம் சேப்ப,
துய்ய தெய்வ வான் படைக்கு எலாம் வரன்முறை துரக்கும்
மெய்கொள் பூசனை விதிமுறை இயற்றி, மேல், வீரன்,
'மொய்கொள் போர்க் களத்து எய்துவாம் இனி' என முயன்றான்.

கொள்ளியின் சுடர் அனலிதன் பகழி கைக்கொண்டான்;
அள்ளி நுங்கலாம் ஆர் இருட் பிழம்பினை அழித்தான்;
வெள்ள வெங் களப் பரப்பினைப் பொருக்கென விழித்தான்;
தள்ளி, தாமரைச் சேவடி நுடங்கிடத் தளர்ந்தான். 186

போர்க்களம் புகுந்த இராமன் சுக்கிரீவன் முதலிய படைத் தலைவர்களைத் தனித் தனிக் காணுதல்

நோக்கினான் பெருந் திசைதொறும்; முறை முறை நோக்கி,
ஊக்கினான்; தடந் தாமரைத் திரு முகத்து உதிரம்
போக்கினான்; நிணப் பறந்தலை அழுவத்துள் புக்கான்;
காக்கும் வானரத் துணைவரைத் தனித் தனிக் கண்டான். 187

சுக்கிரீவனை நோக்கி, தன் தாமரைத் துணைக் கண்
உக்க நீர்த்திரள் ஒழுகிட, நெடிது நின்று உயிர்த்தான்;
'தக்கதோ, இது நினக்கு!' என, தனி மனம் தளர்ந்தான்;
பக்கம் நோக்கினன்; மாருதி தன்மையைப் பார்த்தான். 188

சுக்கிரீவன், அனுமன், முதலியோரின் நிலைமை கண்டு, இராமன் நொந்து புலம்புதல்

'கடல் கடந்து புக்கு, அரக்கரைக் கருமுதல் கலக்கி,
இடர் கடந்து நான் இருப்ப, நீ நல்கியது இதுவோ?
உடல் கடந்தனவோ, உனை அரக்கன் வில் உதைத்த
அடல் கிடந்த போர் வாளி?' என்று, ஆகுலித்து அழுதான். 189

'முன்னைத் தேவர்தம் வரங்களும், முனிவர்தம் மொழியும்,
பின்னைச் சானகி உதவியும், பிழைத்தன, பிறிது என்?
புன்மைச் செய் தொழில் என் வினைக் கொடுமையால் புகழோர்
'என்னைப் போல்பவர் ஆர் உளர், ஒருவர்?' என்று இசைத்தான்.

'புன் தொழில் புலை அரசினை வெஃகினேன் பூண்டேன்;
கொன்று ஒருக்கினென், எந்தையை; சடாயுவைக் குறைத்தேன்;
இன்று ஒருக்கினென், இத்தனை வீரரை; இருந்தேன்!
வன் தொழிற்கு ஒரு வரம்பும் உண்டாய் வரவற்றே? 191

'தமையனைக் கொன்று, தம்பிக்கு வானரத் தலைமை
அமைய நல்கினென், அடங்கலும் அவிப்பதற்கு அமைந்தேன்;
கமை பிடித்து நின்று, உங்களை இத்துணை கண்டேன்;
சுமை உடல் பொறை சுமக்க வந்தனென்' எனச் சொன்னான். 192

விடைக் குலங்களின் இடை ஒரு விடை கிடந்தென்ன,
கடைக்கண் தீ உக, அங்கதக் களிற்றினைக் கண்டான்;
'படைக்கலம் சுமந்து உழல்கின்ற பதகனேன், பழி பார்த்து,
அடைக்கலப் பொருள் காத்தவாறு அழகிது' என்று அழுதான். 193

இலக்குவனைக் கண்டு இராமன் அடைந்த துயரம்

உடலிடைத் தொடர் பகழியின் ஒளிர் கதிர்க் கற்றைச்
சுடருடைப் பெருங் குருதியில், பாம்பு எனச் சுமந்த
மிடலுடைப் பிண மீமிசை, தான் பண்டை வெள்ளக்
கடலிடைத் துயில்வான் அன்ன தம்பியைக் கண்டான். 194

பொருமினான், அகம்; பொங்கினான்; உயிர் முற்றும் புகைந்தான்;
குரு மணித் திரு மேனியும், மனம் எனக் குலைந்தான்;
தருமம் நின்று தன் கண் புடைத்து அலமர, சாய்ந்தான்;
உருமினால் இடியுண்டது ஓர் மராமரம் ஒத்தான். 195

உயிர்த்திலன் ஒரு நாழிகை; உணர்ந்திலன் ஒன்றும்;
வியர்த்திலன், உடல்; விழித்திலன், கண் இணை; விண்ணோர்,
'அயர்த்தனன்கொல்?' என்று அஞ்சினர்; அங்கையும் தாளும்
பெயர்த்திலன்; உயிர் பிரிந்திலன்—கருணையால் பிறந்தான். 196

தாங்குவார் இல்லை; தம்பியைத் தழீஇக்கொண்ட தடக் கை
வாங்குவார் இல்லை; வாக்கினால் தெருட்டுவார் இல்லை;
பாங்கர்ஆயினோர் யாவரும் பட்டனர்; பட்ட
தீங்குதான் இது; தமியனை யார் துயர் தீர்ப்பார்? 197

கவந்த பந்தமும், கழுதும், தம் கணவரைக் காணாச்
சிவந்த கண்ணியர் தேடினர் திரிபவர் திரளும்,
உவந்த சாதகத்து ஈட்டமும், ஓரியின் ஒழுங்கும்,
நிவந்த; அல்லது, பிறர் இல்லை, களத்திடை நின்றார். 198

வான நாடியர் வயிறு அலேத்து அழுது, கண் மலி நீர்
சோனே மாரியின் சொரிந்தனர்; தேவரும் சோர்ந்தார்;
ஏனே நிற்பவும் திரிபவும் இரங்கின, எவையும்
ஞான நாயகன் உருவமே ஆதலின், நடுங்கி. 199

முகைய நாள்மலர்க் கிழவற்கும், முக்கணுன் தனக்கும்,
நகையும் நீங்கிய; திருமுகம், கருணேயின் நலிந்த;
தொகையுள் நின்றவர்க்கு உற்றது சொல்லி என்? தொடர்ந்த
பகையில் பார்க்கின்ற பாவமும் கலுழ்ந்தது, பரிவால். 200

அண்ணலும், சிறிது உணர்விஞேடு அயாவுயிர்ப்பு அணுகக்
கண் விழித்தனன்; தம்பியைத் தெரிவுறக் கண்டான்;
'விண்ணே உற்றனன்; மீள்கிலன்' என்று, அகம் வெதும்பி,
புண்ணின் உற்றது ஓர் எரி அன்ன துயரினன் புலம்பும்: 201

சிறிது உணர்வு பெற்ற இராமன் இலக்குவனேக் குறித்துப் புலம்புதல்

' ''எந்தை இறந்தான்'' என்றும் இருந்தேன்; உலகு எல்லாம்
தந்தனென் என்னும் கொள்கை தவிர்ந்தேன்; தனி அல்லேன்;
உய்ந்தும் இருந்தாய் நீ என நின்றேன்; உரை காணேன்;
வந்தனென், ஐயா! வந்தனென், ஐயா! இனி வாழேன்! 202

'தாயோ நீயே; தந்தையும் நீயே; தவம் நீயே;
சேயோ நீயே; தம்பியும் நீயே; திரு நீயே;
போயோ நின்ருய்; என்னே இகந்தாய்; புகழ் பாராய்,
நீயோ; யானே, நின்றனென்; நெஞ்சம் வலியேனல். 203

'ஊரு நின்ற புண்ணுடையாய்பால் உயிர் காணேன்;
ஆரு நின்றேன், ஆவி சுமந்தேன்; அழிகின்றேன்;
ஏறே! இன்னும் உய்யினும் உய்வேன்; இரு கூருக்
கீரு நெஞ்சம் பெற்றனென் அன்ருே, கெடுவேனே? 204

'பயிலும் காலம் பத்தொடு நாலும் படர் கானத்து
அயில்கின்றேனுக்கு ஆவன நல்கி, அயிலாதாய்!
வெயில் என்று உன்னுய், நின்று தளர்ந்தாய்! மெலிவு எய்தி,
துயில்கின்ருயோ இன்று? இவ் உறக்கம் துறவாயோ? 205

அயிரா நெஞ்சும் ஆவியும் ஒன்றே எனும் அச் சொல்
பயிரா எல்லேப் பாதகனேற்கும் பரிவு உண்டோ?
செயிரோ இல்லா உன்னே இழந்தும், திரிகின்றேன்;
உயிரோ, நானே, யாவர், உனக்கு இங்கு உறவு? அம்மா! 206

'வேள்விக்கு ஏகி, வில்லும் இறுத்து, ''ஓர் விடம் அம்மா
வாழ்விக்கும்!'' என்று எண்ணினென், முன்னே வருவித்தேன்;
சூழ்வித்து, என்னைச் சுற்றினரோடும் சுடுவித்தேன்;
தாழ்வித்தேனோ, இத்தனை கேடும் தருவித்தேன்? 207

'மண்மேல் வைத்த காதலின், மாதா முதலோர்க்கும்
புண்மேல் வைத்த தீ நிகர் துன்பம் புகுவித்தேன்;
பெண்மேல் வைத்த காதலின், இப் பேறுகள் பெற்றேன்;
எண்மேல் வைத்த என் புகழ் நன்றால்! எளியேனோ! 208

'மாண்டாய் நீயோ; யான் ஒருபோதும் உயிர் வாழேன்;
ஆண்டான்அல்லன் நானிலம், அந்தோ, பரதன்தான்!
பூண்டார் எல்லாம் பொன்றுவர், துன்பப் பொறையாற்றார்;
வேண்டாவோ, நான் நல் அறம் அஞ்சி, மெலிவுற்றால்? 209

'அறம், தாய், தந்தை, சுற்றமும், மற்றும், எனை அல்லால்,
துறந்தாய்! என்றும் என்னை மறாதாய்! துணை வந்து
பிறந்தாய்! என்னைப் பின்பு தொடர்ந்தாய்! பிரிவு அற்றாய்!
இறந்தாய்; உன்னைக் கண்டும் இருந்தேன், எளியேனோ? 210

'சான்றோர் மாதைத் தக்க அரக்கன் சிறை தட்டால்,
ஆன்றோர் சொல்லும் நல் அறம் அன்னான் வயமானால்,
மூன்று ஆய் நின்ற பேர் உலகு ஒன்றாய் முடியாவேல்,
தோன்றாவோ, என் வல் விலின் வீரத் தொழில் அம்மா? 211

'வேலைப் பள்ளக் குண்டு அகழிக்கும், விராதற்கும்,
காலின் செல்லும் கவந்தன் உயிர்க்கும், கரனுக்கும்,
மூலப் பொத்தல் செத்த மரத்து ஏழ் முதலுக்கும்,
வாலிக்கும்மே ஆயினவாறு என் வலி அம்மா! 212

'இருந்தேனானால், இந்திரசித்தே முதலாய
பெருந் தேராரைக் கொன்று பிழைக்கப் பெறுவேனேல்,
வருந்தேன்; ''நீயே வெல்லுதி'' என்னும் வலி கொண்டேன்;
பொருந்தேன், நான், இப் பொய்ப் பிறவிக்கும் பொறை அல்லேன்!

'மாதாவும், நம் சுற்றமும், நாடும், மறையோரும்,
''ஏது ஆனாரோ?'' என்று தளர்ந்தே இறுவாரை,
தாதாய்! காணச் சால நினைந்தேன்; தளர்கின்றேன்;
போதாய், ஐயா, பொன் முடி என்னைப் புனைவிப்பான்! 214

'பாசமும் முற்றச் சுற்றிய போதும், பகையாலே
நாசம் உறுற்றிய போதும், நடந்தேன், உடன் அல்லேன்;
நேசமும் அற்றோர் செய்வன செய்தேன்; தனி நின்றேன்;
தேசமும் மற்று, என் கொற்ற நலத்தைச் சிரியாரோ? 215

'கொடுத்தேன் அன்றே, வீடணனுக்குக் குலம் ஆள
முடித்து ஓர் செல்வம்; யான் முடியாதே முடிகின்றேன்;
படித்தேன் அன்றே, பொய்ம்மை? குடிக்குப் பழி பெற்றேன்;
ஒடித்தேன் அன்றே என் புகழ் நானே, உணர்வு அற்றேன்?' 216

புலம்பிய இராமன் அறிவு சோர்ந்து துயில்தல்

என்று என்று ஏங்கும், விம்மும், உயிர்க்கும், இடை அஃகி,
சென்று ஒன்று ஒன்றோடு இந்தியம் எல்லாம் சிதைவு எய்த,
பொன்றும் என்னும் தம்பியை ஆர்வத்தொடு புல்லி,
ஒன்றும் பேசான்; தன்னை மறந்தான், துயில்வுற்றான். 217

தேவர்கள் அன்போடு அழைத்து, இராமனுக்கு உண்மையை உணர்த்துதல்

கண்டார் விண்ணோர்; கண்கள் புடைத்தார், கலுழ்கின்றார்;
கொண்டார், துன்பம்; 'என் முடிவு?' என்னக் குலைகின்றார்;
'அண்டா! ஐயா! எங்கள் பொருட்டால் அயர்கின்றாய்;
உண்டோ, உன்பால் துன்பு?' என அன்போடு உரை செய்தார்.

'உன்னை உள்ளபடி அறியோம்; உலகை உள்ள திறம் உள்ளோம்;
பின்னை அறியோம்; முன் அறியோம்; இடையும் அறியோம், பிறழாமல்;
நின்னை வணங்கி, நீ வகுத்த நெறியில் நிற்கும் இது அல்லால்,
என்னை, அடியோம் செயற்பால?—இன்ப-துன்பம் இல்லோனே!

'''அரக்கர் குலத்தை வேர்அறுத்து, எம் அல்லல் நீக்கியருள்வாய்'' என்று
இரக்க, எம்மேல் கருணையினால், ஏயா உருவம் இவை எய்தி,
புரக்கும் மன்னர் குடிப் பிறந்து போந்தாய்! அறத்தைப் பொறை தீர்ப்பான்,
கரக்க நின்றே, நெடு மாயம் எமக்கும் காட்டக்கடவாயோ? 220

'ஈன்றாய்! இடுக்கண் துடைத்து அளிப்பான் இரங்கி, அரசர் இல் பிறந்தாய்!
''மூன்று ஆம் உலகம் துயர் தீர்த்தி'' என்னும் ஆசை முயல்கின்றோம்;
ஏன்றும் மறந்தோம், ''அவன் அல்லன்; மனிதன்'' என்றே; இம் மாயம்,
போன்றது இல்லை; ஆளுடையாய்! பொய்யும் புகலப் புக்காயோ?

'அண்டம் பலவும், அனைத்து உயிரும், அகத்தும் புறத்தும் உள ஆக்கி,
உண்டும் உமிழ்ந்தும், அளந்து இடந்தும், உள்ளும் புறத்தும் உளை ஆகிக்
கொண்டு, சிலம்பி தன் வாயின் கூர் நூல் இயையக் கூடு இயற்றி,
பண்டும் இன்றும் அமைக்கின்ற படியை ஒருவாய்—பரமேட்டி! 222

'துன்ப விளையாட்டு இதுவேயும், நின்னைத் துன்பம் தொடர்பு இன்மை,
இன்ப விளையாட்டு ஆம்; எனினும், அறியாதோருக்கு இடர் உறுமால்;
அன்பின் விளைவும், அருள் விளைவும், அறிவின் விளைவும், அவை எல்லாம்,—
முன்பு, பின்பு, நடு, இல்லாய்!—முடித்தால் அன்றி, முடியாவே.

'வருவாய் போல வாராதாய்! வந்தாய் என்று மனம் களிப்ப,
வெருவாதிருந்தோம்; நீ இடையே துன்பம் விளைக்க, மெலிகின்றோம்;
கரு ஆய் அளிக்கும் களைகண்ணே! நீயே இடரைக் காவாயேல்,
திரு வாழ் மார்ப! நின் மாயை எம்மால் தீர்க்கத் தீருமோ?' 224

['அம்பரீடற்கு அருளியதும், அயனார் மகனுக்கு அளித்ததுவும்,
எம்பிரானே! எமக்கு இன்று பயந்தாய் என்றே ஏமுறுவோம்;
வெம்பு துயரம் நீ உழக்க, வெளி காணாது மெலிகின்றோம்;
தம்பி துணைவா! நீ இதனைத் தவிர்த்து, எம் உணர்வைத் தாராயோ?']

இராவணனிடத்திற்குத் தூதர் சென்று, 'உன் பகை முடிந்தது' என அறிவித்தல்

என்ப பலவும் எடுத்து இயம்பி, இமையாதோரும் இடர் உழந்தார்;
அன்பு மிகுதியால், ஐயன் ஆவி உள்ளே அடங்கினான்,
துன்ப மனிதர் கருமமே புரிய முன்பு துணிந்தமையால்;
புன்கண் நிருதர் பெருந் தூதர் போனார், அரக்கனிடம் புக்கார்.

'என் வந்தது, நீர்?' என்று அரக்கர்க்கு இறைவன் இயம்ப, 'எறி செருவில்,
நின் மைந்தன்தன் நெடுஞ் சரத்தால், துணைவர் எல்லாம் நிலம் சேர,
பின்வந்தவனும் முன் மடிந்த பிழையை நோக்கி, பெருந் துயரால்,
முன்வந்தவனும் முடிந்தான்; உன் பகை போய் முடிந்தது' என மொழிந்தார்.

## 23. சீதை களம் காண் படலம்

மகிழ்ச்சிச் செய்தியைப் பறை அறைந்து, நகரத்தார்க்கு அறிவிக்க
இராவணன் கட்டளையிடுதல்

பொய்யார் தூதர் என்பதனால்,
  பொங்கி எழுந்த உவகையன் ஆய்,
மெய் ஆர் நிதியின் பெரு வெறுக்கை
  வெறுக்க வீசி, 'விளைந்தபடி
கை ஆர் வரைமேல் முரசு இயற்றி,
  ''நகரம் எங்கும் களி கூர,
நெய் ஆர் ஆடல் கொள்க!'' என்று,
  நிகழ்த்துக' என்றான்;—நெறி இல்லான். 1

மாய்ந்த அரக்கர் உடலைக் கடலில் எறியுமாறு மருத்தனுக்குக் கூற, அவனும் அவ்வாறே செய்தல்

அந்த நெறியை அவர் செய்ய,
அரக்கன் மருத்தன்தனைக் கூவி,
'முந்த நீ போய், அரக்கர் உடல்
முழுதும் கடலில் முடுக்கிடு; நின்
சிந்தை ஒழியப் பிறர் அறியின்,
சிரமும் வரமும் சிந்துவென்' என்று
உந்த, அவன் போய் அரக்கர் உடல்
அடங்கக் கடலினுள் இட்டான். 2

இராவணன் ஏவியபடி, அரக்கியர் சீதையை விமானத்தில் ஏற்றி, களத்திற்குக் கொண்டு செல்லுதல்

'தெய்வ மானத்திடை ஏற்றி
மனிதர்க்கு உற்ற செயல் எல்லாம்
தையல் காணக் காட்டுமின்கள்;
கண்டால் அன்றி, தனது உள்ளத்து
ஐயம் நீங்காள்' என்று உரைக்க,
அரக்கர் மகளிர் இரைத்து ஈண்டி,
உய்யும் உணர்வு நீத்தாளை
நெடும் போர்க் களத்தின்மிசை உய்த்தார். 3

சீதையின் துயரும், அவளது நிலையைக் கண்டார் உற்ற வருத்தமும்

கண்டாள் கண்ணால் கணவன் உரு;
அன்றி, ஒன்றும் காணாதாள்;
உண்டாள் விடத்தை என, உடலும்
உணர்வும் உயிர்ப்பும் உடன் ஓய்ந்தாள்;
தண் தாமரைப் பூ நெருப்புற்ற
தன்மை உற்றாள்; தரியாதாள்;
பெண்தான் உற்ற பெரும் பீழை
உலகுக்கு எல்லாம் பெரிது அன்றோ! 4

மங்கை அழலும்—வான் நாட்டு
மயில்கள் அழுதார்; மழ விடையோன்
பங்கின் உறையும் குயில் அழுதாள்;
பதுமத்து இருந்த மாது அழுதாள்;
கங்கை அழுதாள்; நாமடந்தை
அழுதாள்; கமலத் தடங் கண்ணன்
தங்கை அழுதாள்; இரங்காத
அரக்கிமாரும் தளர்ந்து அழுதார். 5

பொன் தாழ் குழையாள்தனை ஈன்ற
பூ மா மடந்தை புரிந்து அழுதாள்;
குன்று மறையும், தருமமும், மெய்
குலைந்து குலைந்து, தளர்ந்து அழுத;
பின்றுது உடற்றும் பெரும் பாவம்
அழுத; பின் என் பிறர் செய்கை?
நின்றார் நின்றபடி அழுதார்;
நினைப்பும் உயிர்ப்பும் நீங்கினார். 6

உணர்வு இழந்த சீதையை அரக்கியர் நீர் தெளித்து உபசரிக்க, சீதை தெளிந்து, ஏங்கி வருந்துதல்

நினைப்பும் உயிர்ப்பும் நீத்தாளை
நீரால் தெளித்து, நெடும் பொழுதின்
இனத்தின் அரக்கர் மடவார்கள்
எடுத்தார்; உயிர் வந்து ஏங்கினாள்;
கனத்தின் நிறத்தான்தனைப் பெயர்த்தும்
கண்டாள்; கயலைக் கமலத்தால்
சினத்தின் அலைப்பாள் என, கண்ணைச்
சிதையக் கையால் மோதினாள். 7

அடித்தாள் முலைமேல்; வயிறு அலைத்தாள்;
அழுதாள்; தொழுதாள்; அனல் வீழ்ந்த
கொடித்தான் என்ன, மெய் சுருண்டாள்;
கொதித்தாள்; பதைத்தாள்; குலைவுற்றாள்;
துடித்தாள், மின்போல்; உயிர் கரப்பச்
சோர்ந்தாள்; சுழன்றாள்; துள்ளினாள்;
குடித்தாள் துயரை, உயிரோடும்
குழைத்தாள்; உழைத்தாள்,—குயில் அன்னாள். 8

விழுந்தாள்; புரண்டாள்; உடல் முழுதும்
வியர்த்தாள்; அயர்த்தாள்; வெதும்பினாள்;
எழுந்தாள்; இருந்தாள்; தளிர்க் கரத்தை
நெரித்தாள்; சிரித்தாள்; ஏங்கினாள்;
'கொழுந்தா!' என்றாள்; 'அயோத்தியர்தம்
கோவே!' என்றாள்; 'எவ் உலகும்
தொழும் தாள் அரசேயோ!' என்றாள்;
சோர்ந்தாள்; அரற்றத் தொடங்கினாள்: 9

'உற மேவிய காதல் உனக்கு உடையார்,
புறம் ஏதும் இலாரொடு, பூணகிலாய்;
மறமே புரிவார் வசமாயினையோ—
அறமே!—கொடியாய்; இதுவோ, அருள்தான்? 10

'முதியோர் உணர் வேதம் மொழிந்த அலால்,
கதி ஏதும் இலார் துயர் காணுதியோ?
மதியேன் மதியேன் உனை—வாய்மை இலா
விதியே!—கொடியாய், விளையாடுதியோ? 11

'கொடியேன் இவை காணகிலேன்; என் உயிர் கோள்
முடியாய், நமனே! முறையோ! முறையோ!
விடியா இருள்வாய் எனை வீசினையே?—
அடியேன் உயிரே! அருள் நாயகனே! 12

'எண்ணோ, மயலோடும் இருந்தது நின்
புண் ஆகிய மேனி பொருந்திடவோ?—
மண்ணோர் உயிரே! இமையோர் வலியே!
கண்ணே! அமுதே! கருணாகரனே! 13

'மேவிக் கனல் முன், மிதிலைப் பதி, என்
பாவிக் கை பிடித்தது, பண்ணவ! நின்
ஆவிக்கு ஒரு கோள் வரவோ?—அலர் வாழ்
தேவிக்கு அமுதே! மறையின் தெளிவே! 14

'உய்யாள், உயர் கோசலை தன் உயிரோடு;
ஐயா! இளையோர் அவர் வாழ்கிலரால்;
மெய்யே, வினை எண்ணி, விடுத்த கொடுங்
கைகேசி கருத்து இதுவோ?—களிறே! 15

'"தகை வான் நகர் நீ தவிர்வாய்" எனவும்,
வகையாது, தொடர்ந்து, ஒரு மான் முதலா,
புகை ஆடிய காடு புகுந்து, உடனே
பகை ஆடியவா! பரிவு ஏதும் இலேன்! 16

'"இன்று ஈகிலையேல், இறவு இவ் இடை; மான்
அன்று, ஈ" எனவும் பிரிவோடு அடியேன்
நின்று ஈவது, நின்னை நெடுஞ் செருவில்,
கொன்று ஈவது ஓர் கொள்கை குறித்தலினோ? 17

'நெய் ஆர் பெரு வேள்வி நிரப்பி, நெடுஞ்
செய் ஆர் புனல் நாடு திருத்துதியால்;
மெய் ஆகிய வாசகமும் விதியும்
பொய் ஆன, என் மேனி பொருந்துதலால். 18

'மேதா! இளையோய்! விதியார் விளைவால்,
போதா நெறி எம்மொடு போதுறுநாள்,
''மூது ஆனவன் முன்னம் முடிந்திடு'' எனும்,
மாதா உரையின்வழி நின்றனையோ? 19

'பூவும் தளிரும் தொகு பொங்கு அணைமேல்
கோவும் துயில, துயிலாய்! கொடியார்
ஏவு, உன்தலை வந்த இருங் கணையால்
மேவும் குளிர் மெல் அணை மேவினையோ? 20

இராமன்மீது விழ எழுந்த சீதையைத் திரிசடை தடுத்து, அவளது
மயக்கத்தைத் தீர்த்தல்

'மழு வாள் உறினும் பிளவா மனனோடு
அழுவேன்; இனி, என் இடர் ஆறிட, யான்
விழுவேன், அவன் மேனியின்மீதில்' என,
எழுவாளை விலக்கி இயம்பினளால்: 21

'மாடு உற வளைந்து நின்ற வளை எயிற்று அரக்கிமாரைப்
பாடு உற நீக்கி, நின்ற, பாவையைத் தழுவிக் கொண்டு,
கூடினள் என்ன நின்று, செவியிடை, குறுகிச் சொன்னாள்—
தேடிய தெய்வம் அன்ன திரிசடை, மறுக்கம் தீர்ப்பாள். 22

'மாய மான் விடுத்தவாறும், சனகனை வகுத்தவாறும்,
போய நாள் நாகபாசம் பிணித்தது போனவாறும்,
நீ அமா! நினையாய்; மாள நினைத்தியோ? நெறி இலாரால்
ஆய மா மாயம்; ஒன்றும் அஞ்சலை, அன்னம் அன்னாய்! 23

'கண்ட அக் கனவும், பெற்ற நிமித்தமும், நினது கற்பும்,
தண்ட வாள் அரக்கர் பாவச் செய்கையும், தருமம் தாங்கும்
அண்டர் நாயகன்தன் வீரத் தன்மையும், அயர்த்தாய்போலும்?
புண்டரீகற்கும் உண்டோ, இறுதி, இப் புலையர்க்கு அல்லால்? 24

ஆழியான் ஆக்கைதன்னில் அம்பு ஒன்றும் உறுகிலாமை,
ஏழை! நீ காண்டி அன்றே? இளையவன் வதனம் இன்னும்
ஊழி நாள் இரவி என்ன ஒளிர்கின்றது; உயிருக்கு இன்னல்
வாழியார்க்கு இல்லை; வாளா மயங்கலை—மண்ணில் வந்தாய்! 25

'ஓய்ந்துளன், இராமன், என்னின், உலகம் ஓர் ஏழும் ஏழும்
தீய்ந்துறும்; இரவி பின்னும் திரியுமோ? தெய்வம் என் ஆம்?
வீய்ந்துறும், விரிஞ்சன் முன்னு உயிர் எலாம்; வெருவல், அன்னே!
ஆய்ந்தவை உள்ள போதே, அவர் உளர்; அறமும் உண்டால். 26

'மாருதிக்கு இல்லே அன்றே, மங்கை நின் வரத்தினுலே
ஆர் உயிர் நீங்கல்! நின்பால் கற்புக்கும் அழிவு உண்டாமே?
சீரியது அன்று, இது ஒன்றும்; திசைமுகன் படையின் செய்கை
பேரும், இப்பொழுதே; தேவர் எண்ணமும் பிழைப்பது உண்டோ?

'தேவரைக் கண்டேன்; பைம் பொன் செங் கரம் சிரத்தில் ஏந்தி,
மூவரைக் கண்டாலென்ன, இருவரை முறையின் நோக்கி,
ஆவலிப்பு எய்துகின்றூர்; அயர்த்திலர்; அஞ்சல்; அன்னே!
''கூவலில் புக்கு, வேலே கோட்படும்'' என்று கொள்ளேல். 28

'மங்கலம் நீங்கினுரை, ஆர் உயிர் வாங்கினுரை,
நங்கை! இக் கடவுள் மானம் தாங்குறும் நவையிற்று அன்றல்;
இங்கு, இவை அளவை ஆக, இடர்க் கடல் கடத்தி' என்றாள்;
சங்கையள் ஆய தையல் சிறிது உயிர் தரிப்பதானுள். 29

திரிசடையின் சொற்களால் தெளிவு பெற்ற சீதை, தான் உயிர்
தரித்திருத்தலின் காரணத்தை உரைத்தல்

'அன்னே! நீ உரைத்தது ஒன்றும் அழிந்திலது; ஆதலானே
உன்னேயே தெய்வமாக் கொண்டு, இத்தனே காலம் உய்ந்தேன்;
இன்னம், இவ் இரவு முற்றும் இருக்கின்றேன்; இறத்தல் என்பால்
முன்னமே முடிந்தது அன்றே?' என்றனள்—முளரி நீத்தாள். 30

'நாண் எலாம் துறந்தேன்; இல்லின் நன்மையின் நல்லார்க்கு எய்தும்
பூண் எலாம் துறந்தேன்; என்தன் பொரு சிலே மேகம்தன்னேக்
காணலாம் என்னும் ஆசை தடுக்க, என் ஆவி காத்தேன்;
ஏண் இலா உடலம் நீக்கல் எளிது, எனக்கு' எனவும் சொன்னுள். 31

அரக்கியர் சீதையைக் கொண்டு விமானத்தில் மீண்டு செல்லுதல்

தையலே, இராமன் மேனி தைத்த வேல் தடங் கணுளை,
கைகளின் பற்றிக் கொண்டார், விமானத்தைக் கடாவுகின்றூர்,—
மெய் உயிர் உலகத்து ஆக, விதியையும் வலித்து, விண்மேல்
பொய் உடல் கொண்டு செல்லும் நமனுடைத் தூதர் போன்றூர். 32

# 24. மருத்துமலைப் படலம்

உணவு கொண்டுவந்து, பாசறையில் சேர்த்த வீடணன் போர்க்களத்திற்குச் செல்லுதல்

போயினள் தையல்; இப்பால், 'புரிக' எனப் புலவர் கோமான்
ஏயின கருமம் நோக்கி, ஏகிய இலங்கை வேந்தன்,
மேயின உணவு கொண்டு, மீண்டு, அவை உறையுள் விட்ட
ஆயின ஆக்கி, தான் வந்து, அமர்ப் பெருங் களத்தன் ஆனான். 1

போர்க்களத்தின் நிலை நோக்கி வருந்திய வீடணன் இலக்குவனுடனே சாய்ந்து கிடந்த இராமனை அணுகுதல்

நோக்கினன்; கண்டான், பண்டு, இவ் உலகினைப் படைக்க நோற்றான்
வாக்கினால் மாண்டார் என்ன, வானர வீரர் முற்றும்
தாக்கினர் எல்லாம் பட்ட தன்மையை; விடத்தைத் தானே
தேக்கினன் என்ன நின்று, தியங்கினன், உணர்வு தீர்ந்தான். 2

விளைந்தவாறு உணர்கிலாதான், ஏங்கினன்; வெதும்பினன்; மெய்
உளைந்து உளைந்து உயிர்த்தான்; 'ஆவி உண்டு, இலை' என்ன, ஓய்ந்தான்;
வளைந்த பேய்க் கணமும் நாயும் நரிகளும் இரிய, வந்தான்;
இளங் களிறோடும் சாய்ந்த இராமனை இடையில் கண்டான். 3

வீடணன் ஆய்ந்து, இராமன் மேனியில் வடு இன்மையை உணர்ந்து, துயரம் தணிதல்

'என்பு என்பது, யாக்கை என்பது, உயிர் என்பது, இவைகள் எல்லாம்,
பின்பு என்ப அல்லவேனும், தம்முடை நிலையின் பேரா;
முன்பு என்றும் உளது என்றாலும், முழுவதும் தெரிந்தவாற்றால்,
அன்பு என்பது ஒன்றின் தன்மை அமரரும் அறிந்ததுஅன்றே. 4

'ஆயினும், இவருக்கு இல்லை அழிவு' எனும் அதனால் ஆவி
போயினது இல்லை; வாயால் புலம்பலன், பொருமி; பொங்கித்
தீயினும் எரியும் நெஞ்சன் வெருவலன், தெரிய நோக்கி,
'நாயகன் மேனிக்கு இல்லை வடு' என நடுக்கம் தீர்ந்தான். 5

அயன்படையால் விளைந்தது என்பது உணர்ந்த வீடணன், அதனைத் தீர்க்கும் உபாயத்தை ஆராய்தல்

அந்தணன் படையால் வந்தது என்பதும், ஆற்றல் சான்ற
இந்திரசித்தே எய்தான் என்பதும், இளவற்கு ஆக
நொந்தனன் இராமன் என்னும் நுண்மையும், நொய்தின் நோக்கி,
சிந்தையின் உணர எண்ணி, தீர்வது ஓர் உபாயம் தேர்வான். 6

'உள்ளுறு துன்பம் ஊன்ற, உற்றனன் உறக்கம் அன்றோ?
தெள்ளிதின் உணர்ந்த பின்னே, சிந்தனை தெரிவென் அன்றே;
வள்ளலோ, தம்பி மாள வாழ்கிலன்; மாய வாழ்க்கைக்
கள்வனோ வென்றான்?' என்றான், மழை எனக் கலுழும் கண்ணான். 7

'பாசம் போய் இற்றாற் போலப் பதுமத்தோன் படையும் இன்னே
நாசம் போய் எய்தும்; நம்பி தம்பிக்கும் நாசம் இல்லை;
வீசும் போர்க் களத்து வீய்ந்த வீரரும் மீள்வர்; வெய்ய
நீசன் போர் வெல்வது உண்டோ?' என்றனன், நெறியில் நின்றான்.

'இறவாதவர் யாரேனும் உளரோ?' என, வீடணன் கொள்ளி ஒன்றைப்
பற்றிச் சென்று தேடுதல்

'உணர்வதன்முன்னம், இன்னே உற்றுழி உதவற்கு ஒத்த
துணைவர்கள், துஞ்சல் இல்லார், உளர்எனின், துருவித் தேடிக்
கொணர்குவென், விரைவின்' என்னா, கொள்ளி ஒன்று அம் கைக் கொண்டான்
புணரியின் உதிர வெள்ளத்து, ஒரு தனி விரைவின் போனான். 9

அனுமனைக் கண்ட வீடணன், அவனது உடலில் தைத்த அம்புகளை நீக்கி,
நீர் தெளித்து, மயக்கம் தெளிவித்தல்

வாய் மடித்து, இரண்டு கையும் முறுக்கி, தன் வயிரச் செங் கண்
தீ உக, கனகக் குன்றின் திரண்ட தோள் மழையைத் தீண்ட
ஆயிர கோடி யானைப் பெரும் பிணத்து அமளி மேலான்,
காய் சினத்து அனுமன் என்னும் கடல் கடந்தானைக் கண்டான். 10

கண்டு, தன் கண்களூடு மழை எனக் கலுழி கால,
'உண்டு உயிர்' என்பது உன்னி, உடற் கணை ஒன்று ஒன்று ஆக,
விண்ட நீர்ப் புண்ணின்நின்று மெல்லென விரைவின் வாங்கி,
கொண்டல் நீர் கொணர்ந்து, கோல முகத்தினைக் குளிரச் செய்தான்.

உணர்வு பெற்ற அனுமன், இராமனைப் பற்றி உசாவி அறிதல்

உயிர்ப்பு முன் உதித்த பின்னர், உரோமங்கள் சிலிர்க்க ஊடு
வியர்ப்பு உளதாக, கண்கள் விழித்தன, மேனி மெல்லப்
பெயர்த்து, வாய் புனல் வந்து ஊற, விக்கலும் பிறந்ததாக,
அயர்த்திலன் இராம நாமம், வாழ்த்தினன்; அமரர் ஆர்த்தார். 12

அழுகையோடு உவகை உற்ற வீடணன் ஆர்வம் கூர,
தழுவினன் அவனை, தானும் அன்பொடு தழுவி, 'தக்கோய்!
வழு இலன் அன்றே, வள்ளல்?' என்றனன்; 'வலியன்' என்றான்;
தொழுதனன், உலகம் மூன்றும் தலையின்மேல் கொள்ளும் தூயான்.

'சாம்பனே வாழ்விக்க வல்லவன்' என்பது உணர்ந்து, இருவரும் சாம்பனைத் தேடிச் சென்று அடைதல்

அன்பு தன் தம்பிமேல் ஆத்து, அறிவினை மயக்க, ஐயன்,
துன்பொடும் துயிலன் ஆனான்; உணர்வு இனித் தொடர்ந்த பின்னை
என் புகுந்து எய்தும் என்பது அறிகிலென்!' என்றலோடும்,
'தன் பெருந் தகைமைக்கு ஒத்த சாம்பன் எத் தலையன்?' என்றான்.

'அறிந்திலென் அவனை; யாண்டும் கண்டிலென்; ''ஆவி யாக்கை
பிறிந்திலன், உளன்'' என்று ஒன்றும் தெரிந்திலென், பெயர்ந்தேன்' என்று
செறிந்த தார் நிருதர் வேந்தன் உரைசெய, காலின் செம்மல்,
'இறும் திறம் அவனுக்கு இல்லை; நாடுதும், ஏகி' என்றான். 15

'அன்னவன்தன்னைக் கண்டால், ஆணையே, அரக்கர்க்கு எல்லாம்
மன்னவ! நம்மை ஈண்டு வாழ்விக்கும் உபாயம் வல்லன்'
என்னலும், 'உய்ந்தோம், ஐய! ஏகுதும் விரைவின்' என்றான்;
மின் எரி ஒளியில் சென்றார்; சாம்பனை விரைவில் கண்டார். 16

அம்பினால் வருந்தி மயங்கிய நிலையிலும், சாம்பன் செவி வாயிலாக இருவரின் வருகையை உணர்ந்தவனாய்ச் சிந்தித்தல்

எரிகின்ற மூப்பினாலும், ஏவுண்ட நோவினாலும்,
அரிகின்ற துன்பத்தாலும், ஆர் உயிர்ப்பு அடங்கி, ஒன்றும்
தெரிகின்றது இல்லா மம்மர்ச் சிந்தையன்எனினும், வீரர்
வருகின்ற சுவட்டை ஓர்ந்தான், செவிகளால்—வயிரத் தோளான்.

'அரக்கனோ? என்னை ஆளும் அண்ணலோ? அனுமன்தானோ?
இரக்கம் உற்று அருள வந்த தேவரோ? முனிவரேயோ?
வரக் கடவார்கள், எல்லாம்; மாற்றலர், மலைந்து போனார்;
புரக்க உள்ளாரே!' என்னக் கருதினன், பொருமல் தீர்ந்தான். 18

வந்துள்ளாரை வினவி அறிந்து, அனுமனின் வருகையால் சாம்பன் பெரு மகிழ்வு கொள்ளுதல்

வந்து அவண் நின்று, குன்றின் வார்ந்து வீழ் அருவி மானச்
சிந்திய கண்ணின் நீரர் ஏங்குவார்தம்மைத் தேற்றி,
'அந்தம் இல் குணத்திர்! யாவிர், அணுகினிர்?' என்றான்; 'ஐய!
உய்ந்தனம்; உய்ந்தோம்!' என்ற வீடணன் உரையைக் கேட்டான்.

'மற்று அயல் நின்றான் யாவன்?' என்ன, மாருதியும், 'வாழி!
கொற்றவ! அனுமன் நின்றேன்; தொழுதனென்' என்று கூற,
'இற்றனம், ஐய! எல்லோம் எழுந்தனம், எழுந்தோம்!' என்னா,
உற்ற பேர் உவகையாலே, ஓங்கினான், ஊற்றம் மிக்கான். 20

இராமனின் நிலையையும் சாம்பன் உசாவி அறிந்து, 'விரைந்து போய் மருந்து கொணர்க' என அனுமனுக்குக் கூறுதல்

'விரிஞ்சன் வெம் படை என்றாலும், வேதத்தின் வேதம் அன்ன
அரிந்தமன் தன்னை ஒன்றும் ஆற்றலது என்னும் ஆற்றல்
தெரிந்தனென்; முன்னே, அன்னான் செய்தது என்? தெரித்தி' என்றான்;
'பெருந்தகை துன்ப வெள்ளத் துயில் உளான், பெரும!' என்றான்.

'அன்னவன் தன்மை கண்டால் ஆற்றுமோ? ஆக்கை வேறே;
இன் உயிர் ஒன்றே; மூலத்து இருவரும் ஒருவரேயால்;
என், அது கிடக்க; தாழா இங்கு, இனி இமைப்பின் முன்னர்,
கொன் இயல் வயிரத் தோளாய்! மருந்து போய்க் கொணர்தி' என்றான்.

'எழுபது வெள்ளத்தோரும், இராமனும், இளைய கோவும்,
முழுதும் இவ் உலகம் மூன்றும், நல் அற மூர்த்தி தானும்,
வழு இலா மறையும், உன்னால் வாழ்ந்தன ஆகும்; மைந்த!
பொழுது இறை தாழாது, என் சொல் நெறி தரக் கடிது போதி. 23

மருத்துமலைக்குச் சாம்பன் வழி கூறுதல்

'பின்பு உளது இக் கடல் என்னப் பெயர்ந்ததற்பின்
யோசனைகள் பேச நின்ற
ஒன்பதினாயிரம் கடந்தால், இமயம் எனும்
குலவரையை உறுதி; உற்றால்,
தன் பெருமை ஓர் இரண்டாயிரம் உள
யோசனை; அது பின் தவிரப் போனால்,
முன்பு உள யோசனை எல்லாம் முற்றினை, பொற்-
கூடம் சென்று உறுதி, மொய்ம்ப! 24

'இம் மலைக்கும் ஒன்பதினாயிரம் உளதாம்,
யோசனையின் நிடதம் என்னும்
செம் மலை; அம் மலைக்கும் அளவு அத்தனையே; அது
கடந்தால், சென்று காண்டி,
எம் மலைக்கும் அரசு ஆய வடமலையை;
அம் மலையின் அகலம் எண்ணின்,
மொய்ம் மலைந்த திண் தோளாய்! முப்பத்து ஈர்-
ஆயிரம் யோசனையின் முற்றும்; 25

மேருவினைக் கடந்து, அப்பால் ஒன்பதினாயிரம்
உள ஓசனையை விட்டால்,
நேர் அணுகும் நீலகிரிதான் இரண்டா-
யிரம் உள யோசனையின் நிற்கும்;
மாருதி! மற்று அதற்கு அப்பால் யோசனை
நாலாயிரத்தின் மருந்து வைகும்,
கார் வரையைக் காணுதி; மற்று, அது காண,
இத் துயர்க்குக் கரையும் காண்டி; 26

அங்குள்ள மருந்துகளின் அடையாளம் முதலியவற்றைச் சாம்பன் தெரிவித்தல்

'மாண்டாரை உய்விக்கும் மருந்து ஒன்றும்,
மெய் வேறு வகிர்களாகக்
கீண்டாலும் பொருந்துவிக்கும் ஒரு மருந்தும்,
படைக்கலங்கள் கிளர்ப்பது ஒன்றும்,
மீண்டேயும் தம் உருவை அருளுவது ஓர் மெய்ம்
மருந்தும், உள; நீ, வீர!
ஆண்டு ஏகி, கொணர்தி' என அடையாளத்தொடும்
உரைத்தான், அறிவின் மிக்கான். 27

['இன்ன மருந்து ஒரு நான்கும், பயோததியைக்
கலக்கிய ஞான்று, எழுந்த; தேவர்
உன்னி அமைத்தனர்; மறைக்கும் எட்டாத
பரஞ்சுடர், இவ் உலகம் மூன்றும்
தன் இரு தாள் உள் அடக்கிப் பொலி போழ்தின்,
யான் முரசம் சாற்றும் வேலை,
அன்னவை கண்டு, உயாவுதலும், தொல் முனிவர்
அவற்று இயல் எற்கு அறிவித்தாரால்;] 28

'இம் மருந்து காத்து உறையும் தெய்வங்கள் எண் இலவால்;
இரங்கா, யார்க்கும்;
நெய்ம் மருங்கு படரகில்லா நெடு நேமிப்
படையும் அவற்றுடனே நிற்கும்;
பொய்ம் மருங்கின் நில்லாதாய்! புரிகின்ற
காரியத்தின் பொதுமை நோக்கி,
கைம் மருங்கு உண்டாம்; நின்னைக் காயாவாம்;
அப்புறம் போய்க் கரக்கும்', என்றான். 29

'மருந்து கொணர்வேன்' என, அனுமன் பெரு வடிவு கொண்டு, விசைத்து எழுதல்

'ஈங்கு இதுவே பணி ஆகில், இறந்தாரும்
பிறந்தாரே; எம் கோக்கு யாதும்
தீங்கு இடையூறு எய்தாமல், தெருட்டுதிர், போய்'
எனச் சொல்லி, அவரைத் தீர்ந்தான்—
ஓங்கினன் வான் நெடு முகட்டை உற்றனன்; பொன்
தோள் இரண்டும் திசையோடு ஒக்க
வீங்கின; ஆகாசத்தை விழுங்கினனே
என வளர்ந்தான்—வேதம் போல்வான். 30

கோளோடு தாரகைகள், கோத்து அமைந்த
மணி ஆரக் கோவை போன்ற;
தோளோடு தோள் அகலம் ஆயிரம்
யோசனை எனவும் சொல்ல ஒண்ணு;
தாளோடு தாள் பெயர்க்க, இடம் இலது-
ஆகியது இலங்கை; தடக் கை வீச,
நீளோடு திசை போதா; விசைத்து எழுவான்
உருவத்தின் நிலை ஈது அம்மா! 31

வால் விசைத்து, கைந் நிமிர்த்து, வாயினையும்
சிறிது அகல வகுத்து, மானக்
கால் நிலத்தினிடை ஊன்றி, உரம் விரித்து,
கழுத்தினையும் சுரித்துத் தூண்டி,
தோல் மயிர்க் குந்தளம் சிலிர்ப்ப, விசைத்து எழுந்தான்,
அவ் இலங்கை, துளங்கிச் சூழ்ந்த
வேலையில் புக்கு அழுந்தியது ஓர் மரக்கலம்போல்,
சுரித்து உலைய,—விசையத் தோளான். 32

அனுமனின் வேகத்தால் நிகழ்ந்தவை

கிழிந்தன, மா மழைக் குலங்கள்; கீண்டது, நீள்
நெடு வேலை; கிழக்கும் மேற்கும்
பொழிந்தன, மீன்; தொடர்ந்து எழுந்த, பொருப்புஇனமும்,
தருக் குலமும், பிறவும், பொங்கி;
அழிந்தன, வானவர் மானம், ஆகாயத்
திடையினில் பேர் அசனி என்ன
விழுந்தன, நீர்க் கடல் அழுந்த; ஏறின மேல்,
கீறின போய்த் திசைகள் எல்லாம். 33

பாய்ந்தனன், அங்கு அப்பொழுதே; பரு வரைகள்
எனைப் பலவும் படர ஆர்த்துச்
சாய்ந்தன; 'பேர் உடல் பிறந்த சண்டமா-
ருத விசையில், தாதை சால
ஓய்ந்தனன்' என்று உரைசெய்ய, விசும்பூடு
படர்கின்றான், உரு வேகத்தால்,
காய்ந்தன வேலைகள்; மேகம் கரிந்தன; வெந்து
எரிந்த, பெருங் கானம் எல்லாம். 34

கடல் முன்னே நிமிர்ந்து ஓட, கால் பின்னே
தொடர்ந்து ஓட, கடிதின் செல்வான்
உடல் முன்னே செல, உள்ளம் கடைக் குழையாய்ச்
செல, செல்வான் உருவை நோக்கி,
'அடல் முன்னே தொடங்கிய நாள், ஆழ் கடல் சூழ்
இலங்கை எனும் அரக்கர் வாழும்
திடல் முந்நீரிடைப் படுத்து, பறித்தனன் நம்
துயர்' என்றார், தேவர் எல்லாம். 35

வேகத்துடன் உயரத்தில் செல்லும் அனுமனைக் கண்ட வானுலகத்தவரின் கூற்று

மேகத்தின் பதம் கடந்து, வெங் கதிரும்
தண் கதிரும் விரைவில் செல்லும்
மாகத்தின் நெறிக்கு அப்பால், வானமீன்
குலம் விளங்கும் வரம்பு நீங்கி,
போகத்தின் நெறிகள் தந்தார் புகலிடங்கள்
பிற்படப் போய், 'பூவின் வந்த
ஏகத்து அந்தணன் இருக்கை இனிச் சேய்த்து அன்-
றாம்' என்ன, எழுந்து சென்றான். 36

வான நாட்டு உறைகின்றார், 'வயக் கலுழன்
வல் விசையால், மாயன் வைகும்
தான நாட்டு எழுகின்றான்' என்று உரைத்தார்,
சிலர்; சிலர்கள், 'விரிஞ்சன்தான் தன்
ஏனை நாட்டு எழுகின்றான்' என்று உரைத்தார்;
சிலர் சிலர்கள், 'ஈசன் அல்லால்,
போன நாட்டிடை போக வல்லனோ?
இவன் முக் கண் புனிதன்' என்றார். 37

'வேண்டு உருவம் கொண்டு எழுந்து, விளையாடு-
கின்றான்; மெய் வேதம் நான்கும்
தீண்டு உருவம் அல்லாத திருமாலே
இவன்' என்றார்; ' ''தெரிய நோக்கிக்
காண்டும்'' என இமைப்பதன்முன், கட் புலமும்
கடந்து அகலும்; இன்னும் காண்மின்;
மீண்டு வரும் தரம் அல்லா வீட்டுலகம்
புகும்' என்றார், மேன்மேல் உள்ளார். 38

'உரு' என்றார், சிலர் சிலர்கள்; 'ஒளி' என்றார்,
சிலர் சிலர்கள் 'ஒளிருமேனும்,
அரு' என்றார், சிலர் சிலர்கள்; 'அண்டத்தும்
புறத்தும் நின்று, உலகம் ஆக்கும்
கரு' என்றார், சிலர் சிலர்கள்; 'மற்று' என்றார்,
சிலர் சிலர்கள்; கடலைத் தாவிச்
செரு வென்றான் நிலை ஒன்றும் தெரியகிலார்—
உலகு அனைத்தும் தெரியும் செல்வர். 39

அனுமன் சென்ற வேகத்தில் தோன்றிய ஒலி

வாச நாள் மலரோன்தன் உலகு அளவும்
நிமிர்ந்தன, மேல் வானம் ஆன
காசம் ஆயின எல்லாம் கரந்த தனது
உருவிடையே கனகத் தோள்கள்
வீச, வான் முகடு உரிஞ்ச, விசைத்து எழுவான்
உடல் பிறந்த முழக்கம் விம்ம,
ஆசை காவலர் தலைகள் பொதிர் எறிந்தார்;
விதிர் எறிந்தது, அண்டகோளம். 40

தேவர் முதலியோரின் மகிழ்ச்சி

தொடுத்த நாள்மாலை வானோர், முனிவரே முதல தொல்லோர்,
அடுத்த நான்மறைகள் ஓதி வாழ்த்தலால், அவுணர் வேந்தன்
கொடுத்த நாள், அளந்து கொண்ட குறளனார் குறிய பாதம்
எடுத்த நாள் ஒத்தது—அண்ணல் எழுந்த நாள், உலகுக்கு எல்லாம்.

தேவரும் முனிவர்தாமும், சித்தரும் தெரிவைமாரும்,
மூவகை உலகினுள்ளார், உவகையால் தொடர்ந்து மொய்த்தார்;
தூவின மணியும் சாந்தும் சுண்ணமும் மலரும் தொத்த,
பூவுடை அமரர் தெய்வத் தரு என, விசும்பில் போனான். 42

இமயம் கடந்து, கயிலையைக் கண்டு கைகூப்பி, அனுமன் செல்லுதல்

இமய மால் வரையை உற்றான்; அங்கு உள இமைப்பிலோரும்,
சுமையுடை முனிவர், மற்றும் அறன் நெறி கலந்தோர், எல்லாம்,
'அமைக, நின் கருமம்!' என்று வாழ்த்தினர்; அதனுக்கு அப்பால்,
உமையொருபாகன் வைகும் கயிலை கண்டு, உவகை உற்றான். 43

வட குண திசையில் தோன்றும், மழுவலான் ஆண்டு வைகும்
தட வரைஅதனை நோக்கி, தாமரைக் கைகள் கூப்பி,
படர்குவான்தன்னை, அன்பால் பரமனும் விசும்பில் பார்த்தான்;
தட முலை உமைக்குக் காட்டி, 'வாயுவின் தனயன்' என்றான். 44

உமையின் வினவும், ஈசனது உரையும்

'என், இவன் எழுந்த தன்மை?' என்று, உலகு ஈன்றாள் கேட்ப,
'மன்னவன் இராமன் தூதன் மருந்தின்மேல் வந்தான்; வஞ்சர்
தென் நகர் இலங்கைத் தீமை தீர்வது திண்ணம்; சேர்ந்து,
நன்னுதல்! நாமும் வெம் போர் காணுதும், நாளை' என்றான். 45

ஏமகூடம் முதலியவற்றைத் தாண்டி, அனுமன் மேரு மலையின்மீது போதல்

நாம யோசனைகள் கொண்டது ஆயிரம் நடுவு நீங்கி,
ஏமகூடத்தின் உம்பர் எய்தினன், இறுதி இல்லாக்
காமமே நுகரும் செல்வக் கடவுளர் ஈட்டம் கண்டான்;—
நேமியின் விசையின் செல்வான்—நிடதத்தின் நெற்றி உற்றான். 46

எண்ணுக்கும், அளவு இலாத அறிவினோர் இருந்து நோக்கும்
கண்ணுக்கும், கருதும் தெய்வ மனத்திற்கும், கடியன் ஆனான்,
மண்ணுக்கும், திசைகள் வைத்த வரம்பிற்கும், மலரோன் வைகும்
விண்ணுக்கும், அளவை ஆன மேருவின்மீது சென்றான். 47

மேரு மலையில் அனுமன் பிரமன் முதலிய தேவர்களைக் கண்டு, வணங்கிச் செல்லுதல்

['யாவதும் நிலைமைத் தன்மை இன்னது' என்று, இமையா நாட்டத்
தேவரும் தெரிந்திலாத வடமலைக்கு உம்பர்ச் சென்றான்;
நாவலம் பெருந் தீவு என்னும் நளிர் கடல் வளாக வைப்பில்,
காவல் மூன்று உலகும் ஓதும் கடவுள் மா மரத்தைக் கண்டான்.]48

[அன்ன மா மலையின் உம்பர், உலகு எலாம் அமைத்த அண்ணல்
நல் நெடு நகரம் நோக்கி, அதன் நடு நாப்பண் ஆய
பொன் மலர்ப் பீடம்தன்மேல் நான்முகன் பொலியத் தோன்றும்
தன்மையும் கண்டு, கையால் வணங்கினான்—தருமம் போல்வான்.]

[தரு வனம் ஒன்றில், வானோர் தலைத்தலை மயங்கித் தாழ,
பொரு அரு முனிவர் வேதம் புகழ்ந்து உரை ஓதை பொங்க,
மரு விரி துளப மௌலி, மா நிலக் கிழத்தியோடும்
திருவொடும் இருந்த, மூலத் தேவையும் வணக்கம் செய்தான்.]. 50

